# முன்னுரை

---

அருந் தமிழ் மக்களே !

அரசாங்கத்தார் எனக்கு அளித்த விருந்தை யுண்டு களித்து வேலூர் அரண்மனையில் வாழ்ந்த நாள், சிறியேன் பாடிய பாக்களில் ஒரு பகுதியை, இந்த ஒரு சிறு நூலாக ஆக்கி வெளியிடுகின்றேன். இப்பாமாலை காந்தியடிகட்குச் சூட்டத் தொடுக்கப்பட்டது. பதினெட்டுப் பதிகங்கள் இதில் அடங்கியிருப்பதால், "காந்தி பதினெண்பா" எனப் பெயரிட்டிருக்கிறேன். இப்பாக்களுள் பெரும்பான்மை "ஊழியன்" பத்திரிகையில் வெளிவந்தவை. காந்தியடிகளின் இணையிலாப் புகழைத் தீந் தமிழ்த் தேனில் குழைத்துத் தமிழர்க்கு ஊட்ட வேண்டும் என்ற ஆசை மிகுதியாலேயே இப் பாக்களை யாத்தேன். அதனை அருந்தி மகிழ்வதே தமிழ் மக்கள் எனக்குச் செய்யும் கைம்மாறு. பழம் புகழ் பலவற்றோடு உலகிற் பெரிய ஒருவரின் பெரும் புகழிலும் கலந்து தமிழ்த் தாய் சிறப்புற்று வளர்க !

பவ மாசி ௧௮௳<br>
சென்னை.

ராய. சொக்கலிங்கன்.

# உள்ளுறை.

# 1. காந்தி திருப்பள்ளி யெழுச்சி.

பாயிரம்

அறுசீர் விருத்தம்.

கலங்காத திருவுளத்துக் காந்திக்குத்
திருப்பள்ளி யெழுச்சி கண்டான்
அலங்காரம் ஆங்கலியை யாயிரத்து
முப்பத்து நான்காம் ஆண்டில்
இலங்கும்ஆங் கீரசவில் எழிலானி
பதினேழா இசைந்த நாளில்
மலிந்தபுகழ் தருவேலூர்ச் சிறையதனில்
ராயசொக்க லிங்கன் மாதோ.

## திருப்பள்ளி யெழுச்சி.

எண்சீர் விருத்தம்.

விரிகதிர் பரப்பி இரவியும் எழுந்தான்!
வியனிலம் இருள்கெட வெளுத்தது கீழ்பால்!
அருஞ்சிறைக் கதவம் திறக்கநின் னடியார்
அறையினின் றெழுந்துவந் தடிபணி கின்றார்!
பெருமித அன்னை விடுதலை விரைவில்
பெறுவதற் குன்மேல் விழிநிறைக் கின்றாள்!
ஒருதனி வள்ளால்! ஒண்டவ காந்தி!
உயிர்க்குயி ரே!பள்ளி யெழுந்தரு ளாயே! க

கோழிகள் கூவின! கொழுநகை முல்லைக்
கொடிகள் மலர்ந்தன! படிபுகழ் உழவர்
மேழிகள் ஏந்தினர்! மேதினி வாழ
மேன்மை அறம்பொருள் மேலவர் விண்டார்!
ஏழிசை யோடின்ப யாழ்குழல் இணைத்தே
ஏந்தெழில் மாதர் இயம்பினர் கீதம்!
வாழிகள் பாடினர் வந்தியர்! காந்தி
மாதவ னே!பள்ளி யெழுந்தரு ளாயே! உ

விடிந்தது பொழுது! விளங்கிய துலகம்!
விட்டனர் உறக்கம்! தொட்டனர் தொண்டு!
மடிந்தது மடமை! வாழ்ந்தது நாடு!
மண்டினர் உரிமை மாபெரும் போரில்!
இடிந்தது காரிருள்! இரிந்தனர் மாற்றார்!
எழுந்தனன் விடுதலைப் பரிதியவ் வானில்!
முடிந்தது பகைமை! உயர்ந்தனள் நந்தாய்!
மோகன னே!பள்ளி யெழுந்தரு ளாயே! ங

ஆடின மயில்கள்! கூவின குயில்கள்!
ஆர்த்தன பறவை! அலர்ந்தன மலர்கள்!
மாடமும் மறுகும் வயங்கின ஓசை!
மாதரும் மைந்தரும் மொய்த்தனர் யாண்டும்!
கோடுயர் உதய மால்வரை யதனில்
கொழுங்கதிர் நிறைத்தே எழுந்தனன் பகலோன்!
பாடினர் புலவோர் நின்புகழ்! காந்திப்
பண்ணவ னே!பள்ளி யெழுந்தரு ளாயே! ச

இளங்கதிர் ஞாயிறு எழுந்தது கிழக்கில்!
எழுந்தது சுதந்தரப் பெருமுழக் கெங்கும்!
விளங்கொளி மேனிநம் மேதகு நற்றாய்
விழைந்தனள் பண்டைப் பெறலரும் வாழ்வை!
உளங்களி கூர்ந்தவள் உயர்நின் னடியார்
உன்னரும் பணிதலை பார்த்துநிற் கின்றார்!
வளங்கெழு நாட்டை வாழ்வித் தருள
வந்தவ னே!பள்ளி யெழுந்தரு ளாயே! ௫

பூரண சுதந்தரப் பேரிகை முழங்குது
பூமியும் வானமும் திசைகளும் குலுங்க!
மாரத அறப்போர் வீர்க ளான
மைந்தரும் மாதரும் வல்லணி வகுத்தே
ஆரஞர் உற்ற பாரத அன்னை
அருந்தளை தகர்க்க அமர்க்களஞ் சேர்ந்தார்!
போரதிற் றலைமை பூண்டருள் காந்திப்
புண்ணிய னே!பள்ளி யெழுந்தரு ளாயே! ௬

நின்புகழ் பாடிநின் றேத்தினர் ஒருபால்!
நினதருள் வாய்மொழி நோக்கினர் ஒருபால்!
அன்புரு வாநின் ருடினர் ஒருபால்!
அடிமை தொலைக்கவங் தடைந்தனர் ஒருபால்!
மன்பதை காப்போர் மாசு துடைக்க
வன்கொடுஞ் சிறையுள் வதிந்தனர் ஒருபால்!
என்பொடிந் திடவடி பட்டனர் ஒருபால்!
எம்பெரு மான்!பள்ளி யெழுந்தரு ளாயே! ௭

வாழ்ந்தது நல்லறம்! வாழ்ந்தது நாடு!
வாழ்ந்தனர் மேலோர்! வாழ்ந்தனம் யாமும்!
வீழ்ந்தது தீமை! வீழ்ந்தபேர் ஆசை!
வீழ்ந்தனர் கீழோர்! வீழ்ந்தனர்! வீழ்ந்தார்!
ஆழ்ந்தநின் எண்ணம் அனைத்துமே கூடி
அவனிசீர் பெறும்நாள் அணைந்ததால் ஐய!
தாழ்ந்தவர் உயரத் தரணியில் வந்த
தண்ணளி யே!பள்ளி யெழுந்தரு ளாயே! ௮

கருணையின் கடலே! பெருங்குணக் குன்றே!
கதிர்நிகர் ஒளியே! பெருமித முனியே!
கரைபொரு பொறையே! சபர்மதி வாழ்வே!
சத்திய நெறியே! உத்தமர் ஏறே!
வருமடி போமின் கண்ணே! மணியே!
மணியுரை பாவாய்! மாநில விளக்கே!
அருமையில் உயர்வொப் பொருவரும் இல்லாய்!
ஆருயி ரே!பள்ளி யெழுந்தரு ளாயே! ௯

பொய்கை மலர்ந்தன! மலர்ந்தன சோலை!
புள்ளினம் அலம்பின! அலம்பின சங்கம்!
பெய்மது உண்டிசை பாடின வண்டு!
பேசின நின்புகழ் பூவையும் கிளியும்!
வெய்யவன் தன்னிளம் செங்கதிர் நுழைத்து
விரிமலர்ச் சோலையின் இடைபுகு கின்றான்!
தையலர் மாமலர் கொய்வதற் குற்றார்!
சபர்மதி யோய்!பள்ளி யெழுந்தரு ளாயே! ௧௦

# 2. காந்தி திருத் தசாங்கம்.

---

## பாயிரம்.

### அகவற்பா.

சேண்புகழ் கொண்டவர் வாடாச் சிறையுறை
காண்டகு சிறப்பிற் காந்தி யடிகட்கு,
நாமம், நாடு, நகர், நதி, மலையே,
ஊர்தி, படை, முரசு, ஒண்டார், கொடியெனும்
அங்கம் பத்தும் வெண்பாப் பத்தில்
பாடினன்; காரைப் பதிவாழ் ராய
சொக்க லிங்கன்; தொல்கலி யாண்டு
ஐயா யிரத்துமுப் பத்து நான்காம்
ஆங்கீ ரசவில் ஆனிபதி னெட்டில்;
வேலூர் அரண்மனை மேவிய நாளென்.

## திருத் தசாங்கம்.

### நேரிசை வெண்பா.

க. பேயர்.

சிறையார் மணிக்கிள்ளாய்! தேசம் செழிக்க
இறையான ஏதமிலான் பேரென்?—அரசாள்
முடிமன்னர் அஞ்சவரு மோகனதாஸ் காந்தி
அடிகளவன் பேரென்று அறை! க

௨. நாடு.

பச்சைப் பசுங்கிளியே! பாரினுயர் காந்திமகான்
மெச்சுபுகழ் நாட்டை விளம்புவாய்?—நச்சு
தனியிமயம் தொட்டுத் தமிழ்க்குமரி ஈறும்
முனிவோர்நாடு என்றே மொழி! ௨

௩. ஊர்.

கொஞ்சுமொழி அஞ்சுகமே! கோதறியா எங்காந்தி
விஞ்சும் அரும்பதியென்! விள்ளுவாய்?—அஞ்சுலகில்
யாதுமவன் தன்னூரே! யாவரும் அவற்குறவென்று
ஏதமொன்றும் இன்றி இயம்பு! ௩

௪. ஆறு.

வானூர் மரகதமே! மாதவத்துப் புத்திரிபாய்
ஆனத செல்வன்உயர் ஆறுநவில்?—தேன்நாறும்
கங்கை முதல்தென் கடல்வீழ் பொருநைவரை
இங்கிதப்பல் யாறென்று இசை! ௪

௫. மலை.

இன்மழலைச் சோலை எழிலார் இளந்தத்தாய்!
சொன்னயத்தாற் குற்றமலை சொல்லுவாய்?-தன்னேர்
இரும்பொன் இமயமுதல் எற்பொதிகை ஈறுப்
பெருமலைகள் எண்ணிலவாம் பேசு! ௫

௬. ஊர்தி.

அஞ்சொலிள மெல்லியலார் அங்கைவளர் அஞ்சுகமே!
செஞ்சொலான் செல்லூர்தி செப்புவாய்?—விஞ்சுகலை
பூண்ட நலஞ்சேர் புகழார் பெருங்குணத்தில்
மாண்டார் மனமென்று உரை! ௬

எ. படை.

அமிழ்த மொழிபடிப்பான் ஆயிழையார் அங்கை
கமழூ மரகதமே! காந்தி—இமிழ்படைகொல்?
குன்றெழுந்து வந்திடினும் கூறு படுக்குமிசை
குன்றாத உண்மையெனக் கூறு! எ

அ. முரசு.

சிறுகுதலைத் தத்தாய்! திருவாளன் முன்றில்
மறுகுமணி மாமுரசம் யாதோ?—அறமே!
இனிமை! கருணை! எளிமை!பொறை! வாய்மை!
புனிதம்!இவை என்றே புகல்! அ

கூ. மாலை.

செம்பவள வாய்க்கிள்ளாய்! சீரார் சபர்மதியான்
வம்பவிழும் மாலை வழுத்துவாய்?—எம்பெருமான்
வான்கீண் டுயர்ந்த வரைநேர் பெரும்புகழைத்
தான்கொண்டான் தாரென்றே சாற்று! கூ

க0. கொடி,

ஏரார் இளங்கிளியே! எங்கள் உயிர்க்குயிரான்
காரேர் கொடியென்! கழறுவாய்?—பாரேத்தும்
மும்மை நிறத்து முதுராட் டமைத்தஉயர்
செம்மைக் கொடியெனவே செப்பு! க0

# 3. காந்தி திருப்பொன்னூசல்.

---

## பாயிரம்

### அகவற்பா.

ஐயா யிரத்துமுப் பத்து நான்கென
எய்திய கலியாம் கிரச யாண்டில்
ஆனித் திங்கள் அணிபத் தொன்பான்
பெருநாள் தன்னில் பீடார் காந்தி
திருப்பொன் னூசல் சீர்சால் தமிழில்
சொற்றனன் ராய சொக்க லிங்கன்
வேலூர் அரண்மனை மேவிய நாளென்.

## திருப்பொன் னூசல்.

### எட்டடித் தரவு கொச்சகக் கலிப்பா

உலகம் புகழுமுயர் ஒப்பில்சீர் உற்றிடுமெம்
தலைவன்! அறவாழித் தண்ணளியான்! சால்புடையான்!
மலைநேர் குணமுடையான்! மாநிலமே போற்பொறையான்!
கலைகள் முழுதுணர்ந்தான்! கடமையே தான்புரிவான்!
நிலையில் பொருளறிந்தான்! நேர்மைதனைப் போற்றுவான்!
அலகில் பெருங்காந்தி அண்ணலவன் சீரனைத்தும்
குலவிக் கொழுநருடன் கொஞ்சுதமிழ்ப் பாப்பாடிப்
புலமை எழிலணங்கீர்! பொன்னூசல் ஆடாமோ! ௧

தூணல்ல வயிரமாம்! தூத்தாளம் உத்தரமாம்!
ஆணிப்பொன் அழகொழுக ஆடுமருஞ் சங்கிலியாம்!
மாணிக்க விளிம்பமைத்து மாகதக்கால் வைத்திழைத்த
நாணப்பேர் ஒளிமுழுதும் நலந்திகழும் நீலமணி
பேணிச்செய் பீடாரும் பெரும்பலகை பிறங்கிடவே
பாணிக்கொள் அருங்கணவர் பாராட்ட இனிதமர்ந்து
காணற்கே தவம்வேண்டும் காந்தி புகழ்பாடிப்
பூணொத்த கற்புடையீர்! பொன்னூசல் ஆடாமோ! உ

ஞாலந் தனிற்பெரிய நல்லோன்! நவையில்லான்!
சீலன்! அறிஞருரை தேவன்! திருவாளன்!
காலம் முழுதுணர்ந்தோன்! கடமை தவறாதோன்!
காலன் கொதித்தெழினும் கலங்காதோன்! கஸ்தூரி
மாலை மகிழ்ந்தேற்றோன்! மாதவத்துப் புத்திரிபாய்
பாலன்! எழில்மோகன்! பண்பார் பதம்பாடி
வேலை நிகர்த்தவிழி மென்மைச் சிறகன்னம்
போலும் மடநடையீர்! பொன்னூசல் ஆடாமோ! ௩

கொங்கு விரிமலர்போற் குளிர்முகத்தீர்! சொழுக்குழவித்
திங்கள் நுதலுடையீர்! சிறுகும் திலகமதில்
தங்கும் எழிலுடையீர்! சாரோர் விழியுடையீர்!
சங்கு திகழ்காத்தில் தங்கப் பிடிகடவிக்
கொங்கை குலுங்கப்பூங் கொடிநுண் இடைநுடங்க
வங்கக் கடற்பவள வாய்முத் தமுதுகுக்க
எங்கள் தவக்கொழுந்தின் இணையில் புகழ்பாடிப்
புங்கம் பெறவிழைந்து பொன்னூசல் ஆடாமோ! ௪

மாசில் அரும்பொன்னீர்! வலம்புரிநல் முத்தனையீர்!
காசில் விரையொப்பீர்! கரும்பாவீர்! தேன்பொருவீர்!
ஆசைக் கொழுநர்சீர் ஆகமொரு கையணைத்து,
வீசும் ஒருகையால் மேவுபிடி தொட்டசைத்துப்
பேசு கிளி,குழல்,யாழ், பேரமிர்தம் ஆர்ந்தமொழி
தேசு திகழ்மதுரச் செம்பவள வாய்திறந்தே
ஈசன் இருங்காந்தி எம்மான் புகழ்பாடிப்
பூசல் புரிகண்ணீர்! பொன்னூசல் ஆடாமோ! ௫

ஏரார் இளங்கொடியீர்! எங்கள் பெருமானார்
வாரார் திருமேனி வயங்கும் எழில்பாடிச்
சீரார் ஒளிவீசு திங்கள் முகம்பாடிக்
காரார் அருள்பொழியும் கருணை விழிபாடி
நாரார் அமிழ்தொழுகும் நல்வாய் நனிபாடி
ஓரார் உணர்வரிய ஒற்றைக் கதர்பாடி
நேரார் அதிசயிக்கும் நேர்மைப் புதியமுறைப்
போரார் திறம்பாடிப் பொன்னூசல் ஆடாமோ! ௬

"கம்ப மதயானைக் கழுத்தகத்தின்" மீதமரும்
பைம்பொன் முடியரசர் பணியும் பெருங்குணஞ்சேர்
நம்பன், அறம்வளர்க்கும் நல்லோன் திறம்பாடிக்
கொம்பர் வழிந்தொழுகு கொழுந்தேன் கொடுநலங்கொள்
உம்பர் அமிழ்தனைந்த ஒண்டீஞ் சுவைத்தமிழில்
செம்ப வளமுத்தம் சிறிது புறம்பொசிய
வம்பார் கருங்குழலீர்! மணமாலை வாழ்வண்டு
"பொம்பொம்" எனமுழங்கப் பொன்னூசல் ஆடாமோ!

காதார் குழையாடக் கழைத்தோள் உயர்ந்தாட
மீதார் துகிலாட மேனி சிறிதாடத்
தூதார் துவண்டாடத் துடிநேர் இடையாட
வாதார் விழியாட மணிக்கை வளையாடத்
தாதார் அணியாடச் சதங்கைப் பதமாட
வேதா வியப்பெய்த விளங்கும் இதழ்திறந்து
மாதா மடிமேல் வளர்வோன் புகழ்பாடிப்
போதார் குழலாடப் பொன்னூசல் ஆடாமோ! அ

வானம் நனிபுதைப்ப வளர்ந்த புகழாளன்!
"தானம் தவமிரண்டும்" தங்கும் வனப்புடையான்!
ஞானம் மிகவுடையான்! ஞாலந் தனிற்பெரியான்!
ஊனம் சிறிதுமிலான்! ஒற்றைக் கதருடையான்!
மானக் குழலினிசை வண்யாழ் மிழற்றேசை
கானக் குயிலொலியும் கரும்பும் விரும்பமுதும்
தேனும் குழைத்தமொழிச் சீரீர்! திசைகடந்து
போன புகழ்பாடிப் பொன்னூசல் ஆடாமோ! கூ

சாந்தம், பொறை, கருணை, தண்மை, சீர், புனிதமிசை,
வாய்ந்த அறிவேந்தி, மாநாடு வாழவந்த,
வேந்தன் உயர்காந்தி மெய்சேர்ந்த புகழ்பாடி
ஏய்ந்த கருத்தறிவும் எழிலுமிணை காதலரைக்
காந்தள் வளையணிந்த கவவுக்கை நெகிழாமல்
தேய்ந்த இடைவருந்தச் செய்யகனி வாய்திறந்து
தோய்ந்த இளஞ்சாயல் தோகைமயில் தோற்கடித்துப்
போந்த தமிழியலீர்! பொன்னூசல் ஆடாமோ! க0

# 4. காந்தி திருப் பல்லாண்டு.

பாயிரம்.

அறுசீர் விருத்தம்.

சகமாண்டோர் ஆயிரத்தெண் ணூற்றைம்பத்
 தைந்தின்மேற் சார்ந்து நின்ற
மிகுமாங்கீ ரசஆனி மேவிருபத்
 தொன்பானுள் மேலோர் வாழப்
புகுகாந்தி யடிகட்குப் புனைந்தனநற்
 பல்லாண்டு புனித வேலூர்த்
தகுமாணர் தனிச்சிறையில் ராயசொக்க
 லிங்கனருந் தமிழன் மாதோ.

திருப் பல்லாண்டு.

அறுசீர் விருத்தம்.

சீர்கெழு மாநிலம் யாங்கணும் ஈடில்லான் !
 சீலத்தால் ஞாலமாள்வான் !
நார்நிறை உரையலால் வேறுரை அறியாதான் !
 நல்லறமே நவிலுநாவான் !
ஆர்கலி பொங்கியே ஆரவா ரஞ்செயினும்
 அமைதியிழ வாதஜயன் !
பார்புகழ் அருந்தவக் காந்தி யடிகட்குப்
 பல்லாண்டு கூறுதுமே ! க

மிடி,பிணி, படிறு,பொய், வெஞ்சினம், வீணாசை,
மெலிவு,குடி, கயமை,காமம்,
மடி,கொலை, மற்றோர் மண்ணாள் மடமையொடு
மாணாத அன்னயாவும்
அடியுடன் களைந்திட அவனியில் தோன்றியுயர்
அறம்வளர்த் தருளுமெங்கள்
படிதனில் உயர்ந்தசீர்க் காந்தி யடிகட்குப்
பல்லாண்டு கூறுதுமே! ௨

மாரதர் அதிரதர் முதலிய வல்லாண்மை
மன்னர்சீர் நீதிகண்ட
போரதில் இணையிலா வீரர் பலர்வாழ்ந்த
புரையில்நா டிற்றைநாளில்;
பாரதில் சமம்பெறு தொன்னலர்க் குட்பட்ட
பான்மைதொலை யப்பிறந்த
பாரதர் முடிமணிக் காந்தி யடிகட்குப்
பல்லாண்டு கூறுதுமே! ௩

ஆவியே அனையான்! அவனி தனக்கென்ன
அறிஞரெனும் பெருமைமிக்க
நாவலர் பலருரை நம்பன்! நலந்திகழும்
நாட்டுவிடு தலையினின்று,
காவலர் கன்றினர் ஆயினும் அஞ்சாதே
கடமைபுரி கருணைகொண்ட
பாவிரி கீர்த்திபெம் காந்தி யடிகட்குப்
பல்லாண்டு கூறுதுமே! ௪

எங்கள் உயிரனன் ! இந்தியத் தாய்செய்த
எண்ணிலுயர் தவத்துதித்தான் !
தங்கும் அறிவினர் தனிமனம் அகலாத
சாத்வீக ஞானசீலன் !
பொங்கும் மங்களம் எங்கும் தங்கிடவே
புரியவரு மோகனப்பேர்ப்
பங்கம் இல்குணக் காந்தி யடிகட்குப்
பல்லாண்டு கூறுதுமே ! ௫

ஆடக வரைதொட்டே அழகார் குமரிவரை
அருளொழுகு நாடுதன்னில்
நாடு முயர்மக்கட் பிறப்பில் நடுவின்றி
ஞானமொரு சிறிதுமின்றிக்
கோடி பொருபிரிவார் தீண்டார் எனக்கூறும்
கொடுமையைக் கொலப்பிறந்த
பாட லுடைச்சிறப்புக் காந்தி யடிகட்குப்
பல்லாண்டு கூறுதுமே! ௬

துறவிக்கு வேந்தன் துரும்பென் றுரைத்தஉயர்
தொல்லுரையை உலகமெங்கும்
அறிவிக்க வந்தவன்! அறந்தவிர் ஆரென்றும்
அறியாதான்! அருமையாளன்!
குறைமிக்க ஆட்சியின் கொடுமை நனியாய்ந்து
கூர்த்தமதியோ ருவப்பப்
பறைவிக்கும் எம்பெருங் காந்தி யடிகட்குப்
பல்லாண்டு கூறுமே! ௭

மால்பெற்ற தீமை அனைத்தும் துறந்தபெரு
மாண்புமுழு தும்மடைந்து,
நூல் பெற்ற உண்மை நுணுகி உணர்ந்தரிய
நோன்புதலை மேற்றரித்து,
நூல்பெற்ற ஆழி காங்கோண் டுயர்ச்சிபெறு
நுவலரிய சீலனை
பால்பெற்ற இன்னுரைக் காந்தி யடிகட்குப்
பல்லாண்டு கூறுதுமே! ௮

"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பல்கோடி நூறாயிரம்"
சொல்லாண்ட தூய்மையன்! தொன்மை அறஞ்சொற்ற
துரிசிலாத் திருமனத்தான்!
வில்லாண்ட மெய்ம்மையன்! மேவா இடத்திலும்
விரிந்தபுகழ் வீசுமேலோன்!
பல்லாண்டு வாழ்கென்று காந்தி யடிகட்குப்
பல்லாண்டு கூறுதுமே! ௯

வாழிய உலகெலாம் பல்லாண்டு! வாழ்க
நின்னறம் பல்லாண்டு!
வாழிய ஒருகதர் பல்லாண்டு! வாழ்க
நின்புகழ் பல்லாண்டு!
வாழிய ராட்டினம் பல்லாண்டு! வாழ்க
பெற்றதாய் பல்லாண்டு!
வாழிய அடியவர் பல்லாண்டு! வாழ்க
காந்திநீ பல்லாண்டு! ௧௦

# 5. காந்தி திருநாமம் கேட்டல்.

---

## பாயிரம்

### அறுசீர் விருத்தம்.

அறைசகமாயிரத்தெண்ணூற் றைம்பதனோ
  டைந்தின்மேல் அடைந்து நின்ற
நிறையாங்கீ ரசவாடி நேர்இருபத்
  தாரும்நாள் நேயக் காந்தி
பொறையுடையான் திருநாமம் பூங்கிளியை
  வினவுதமிழ்ப் பொற்பா வேலூர்ச்
சிறையதனில் செய்தளித்தான் ராயசொக்க
  லிங்கனெனும் சிறுவன் மாதோ.

## திருநாமம் கேட்டல்.

### கலி விருத்தம்.

நலமார்ந்த நற்பவள வாய்ப்பச்சை நறுங்கிளியே!
அலையாதே! இங்கேவா! அருந்தேனோ டமுதீவேன்!
புலையான மனமதனைப் பொறிசெலுத்தா எந்தலைவன்
கலையாளன் திருநாமம் எனக்கொருகாற் கழறாயே! க

கொடிப்பவள வாய்க்கிள்ளாய்! இங்கேவா! கொழுந்தேனும்
வடித்தசுவைத் தீங்கரும்பும் மாங்கனியும் உணத்தருவேன்!
பிடித்தபுகழ்ப் போர்ப்பந்தர் பிறந்தருளும் தவக்கொழுந்தின்
மடுத்தஒளித் திருநாமம் எனக்கொருகால் வழுத்தாயே! உ

மாமயிலார் வண்கைவளர் மரகதமே! வா!வா!!நீ
காமுறுநல் லுணவனைத்தும் கனிவுடனே தருவேனுன்!
ஏமமுறும் இணையில்லா எர்வாடாக் கோவிலுறை
தூய்மையுளான் திருநாமம் எனக்கொருகாற் சொல்லாயே! ௩

கொஞ்சுமொழி அஞ்சுகமே! இங்கேவா! கொம்புத்தேன்
விஞ்சஅளைந் தின்கனிகள் வேண்டுமட்டும் ஈந்திடுவேன்!
பஞ்சையர்க்கு வாழ்வளிக்கும் பாரதத்தாய் பெருமகனும்
செஞ்சொல்வலான் திருநாமம் எனக்கொருகாற் செப்பாயே!

குழலொடுயாழ் அமிழ்தளைந்த கொழுமழலைக் கிளவியர்தம்
அழகொழுகும் அங்கைவளர் அணிதத்தாய்! அருகேவா!
கொழுகொழுத்த அமுதீவேன்! கூர்த்தமதிக் கூர்ஜரத்தான்
பழகுபுகழ்த் திருநாமம் எனக்கொருகாற் பாடாயே! ௫

பச்சைநிறப் பைங்கிளியே! பாலொடுதேன் நான்தருவேன்!
இச்சைவழி நாடதனை இயக்குவிக்கும் எம்பெருமான்
துச்சமெனத் திருமுழுதும் துறந்தபெரும் திருவாளன்
அச்சமிலான் திருநாமம் எனக்கொருகால் அருளாயே! ௬

பேதையெனப் பேதையர்சொல் பெண்மணிகள் பேச்சறியக்
காதலிக்கும் கைக்கிள்ளாய்! கனிதருவேன்! கண்ணேவா!
மாதவத்துப் புத்திரிபாய் மணிவயிறு வாய்த்தபுகழ்
நாதனுயர் திருநாமம் எனக்கொருகால் நவிலாயே! ௭

பண்டேய்த்த மொழியுடையார் பங்கிலுறை மரகதமே!
விண்டேய்த்த மெல்லமிழ்தம் நான்தருவேன்! உண்டிடலாம்
மண்டேய்த்த பெரும்புகழான் மாதவரும் நாடோறும்
கொண்டேத்தும் திருநாமம் எனக்கொருகால் கொஞ்சாயே!

பாவையர்தோள் மருவுமிளம் பசுந்தத்தாய் வா!வா!!நீ
மேவிவிளை யாடுதற்கு வேணதெலாம் நான்தருவேன்!
ஆவலுடன் எம்பெருமான் அருளொழுகு திருநாமம்
கூவிடுவாய்! கூவிலுடன் கொன்றிடலாம் தீமையெலாம்! கூ

ஆய்ந்தசொலார் அஞ்சுகமே! அள்ளியுண வீந்திடுவேன்!
மாந்தருய இவ்வுலகில் வந்துதித்த மதிவல்லான்
சேர்ந்தபுகழ்த் திருநாமம் செகமதிக்கும் மோகனதாஸ்
காந்தியென மொழிந்திடுவாய்! கடலமுதம் ஆர்ந்தசொலால்!



# 6. காந்தி புகழ் பாடுமின்!

---

பாடிய தேதி :—ஆங்கீரச ஆவணி கச-உ

## வஞ்சித் தாழிசை.

காந்தியிக் காசினி தாயவள் தளைகொல
வாழ்ந்திட வந்தனன்; மேயவன்! மேலவன்!
சாந்தனைச் சார்ந்திட நாயகன்! நற்றவத்
மாநகர்காள்! வம்மினே! க தூயனைத் துதிசெய்மின்! ச

மோகனன் மொய்ம்பினன்! வேதனை வீழ்த்திட
ஏகனிவ் இரும்புவிக் மேதினி மேவினன்!
காகலான் அடைந்திட காதலன் காந்தியைப்
வாகுடன் வம்மினே! உ பாதமே பாடுமின்! ரு

அன்னைநோய் அகற்றுசீர் தன்னிகர் தானவன்!
வன்பெரும் மகாத்மனின் நன்னயன்! நலிவிலான்!
பொன்னடி பொருந்திட அன்னவன் அணிதிகழ்
மன்னுவீர் வம்மினே! ந பொன்னடி போற்றுமின்!

புத்திரி புத்திரன்!
வித்தகன்! மெய்யறம்
இத்தரை எங்கணும்
மெத்துவீர் வீரர்காள்! ௭

அறிவுடை அந்தணன்!
செறிதரு சீரறம்
நறையெலாம் தங்கிட
நிறைசெய்வீர் நேயர்காள்!

செய்தவன்! சீர்த்தியன்!
கய்தவக் கருத்திலான்!
அய்யனல் லறந்தனைச்
செய்குவீர் தீரர்காள்! ௯

கருணைகொள் காந்தியின்
பெருமைகொள் பேரறம்
அருமைகொள் அவனியில்
உரிமையா உணர்த்துவீர்! ௧௦

எள்ளலில் எம்முடை
வள்ளலின் மன்னறம்
அள்ளியே அவனிசீர்
கொள்ளுமா கொளுத்துவீர்!

காந்தியின் கருத்துடைச்
சாந்தமார் தண்ணறம்
வாய்ந்தஇம் மாநிலம்
மாந்துமா வழுத்துவீர்! ௧௨



# 7. காந்தி சொற் பெருமை.

பாடிய தேதி :—ஆங்கீரஃ ஆவணி கக-உ

வஞ்சி விருத்தம்.

இழுக்கல் நிலத்தில் இடருறு,
வழுக்கும் ஞான்று, மகாத்துமன்
வழுத்தும் அரிய வாய்ச்சொலே ;
ஒழுக்கம் தாங்கும் ஊன்றுகோல் ! க

வெந்த புண்ணில் வேல்கொடு,
உந்தும் உணர்வில் உலகைவீழ்
விந்தை மக்கள் வீழ்ந்திட,
முந்தும் எந்தை மொழிகளே ! உ

வற்றல் மாமும் வளர்ந்திடப்
பற்றும் ; அரிய புண்புடை
ஒற்றைக் கத்தர் உடுத்தவன்
பெற்றம் மிக்க பேச்சரோ ! ௩

எள்ள லில்லா இருங்குண
வள்ளல் காந்தி வாயுரை ;
கொள்ளை யின்பம் கூடிப்பூ
அள்ளி யுண்ணும் அமுதமால் ! ௪

வாடு பயிரை வளர்த்தெழில்
நாடு செழிக்க நல்கிடும்,
பீடு கொண்ட பெருமழை ;
கேடில் காந்தி கிளர்மொழி ! ௫

அமுதம் அன்ன தண்ணளி,
நமையுண் பிக்கும் நன்மதி ;
அமைதி கொண்ட அந்தணன்
குமுத வாயின் கூறுரை ! ௬

தமிழு டன்னற் சந்தனங்
கமழு தென்றற் காற்றதாம் ;
அமிழ்தம் ஈயும் அறிவினன்
மகிழ நல்கு வாசகம் !

உற்ற நோயை ஓட்டிடும்
பெற்ற மிக்க பெருமருந்
திற்றை உலகுக் கீடிலா
வெற்றிக் காந்தி மெய்ம்மொழி ! ௮

இந்தி யத்தாய் இருந்தளை,
முந்த அறுக்கும் மூரிவாள் ;
சிந்தை யிருந்த சீரியான்
பந்தம் விட்ட பண்புரை ! ௯

சாந்தம் ! வீரம் ! தண்ணளி !
ஏந்து பெருமை இலங்கிடும்
காந்தி கூறும் கருத்துரை ;
மாந்தர் வாழ வைக்குமால் ! க௦



# 8. அங்கங்களின் பயன்

பாடிய தேதி :—ஆங்கிரச ஆவணி கரு உ

அறவாழி அந்தணனின்—அணியுலகம் எல்லாம்
உறநாடி ஒருபெரியோன் ஒருவனிவன் என்ன
அறநாட்டும் அம்மானின், அடிக்கமலப் போதில்,
தறைநாட்டிச் சாய்க்காத தலையென்ன தலையே !!
சபர்மதியான் தனைவணங்காத் தலையென்ன தலையே!! க

மாதவத்துப் புத்திரிபாய் மணிவயிறு வாய்த்த,
தீதிலுயர் சீரறத்தைச் செகமுழுதும் சேர்த்த,
நாதனெழில் நல்வடிவும் நாகரிகம் நண்ணும்
காதலதும் மாந்தாத கண்ணென்ன கண்ணே !
காந்திதனைக் காணாத கண்ணென்ன கண்ணே !! உ

கோவியலை நம்மன்னை கொள்ளுதற்குச் சூழ்ந்து,
பூவுலகம் இன்றுவரைப் பூணாத கீர்த்தித்
தாவிலறப் போர்வகுத்த, தண்ணளியார் காந்திச்
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே !
செப்பவன்சீர் கேளாத செவியென்ன செவியே !! ௩

காதல்நிறை கஸ்தூரி கணவன்; உயர் நந்தாய்
தீதிலருஞ் சிறுவன்; சீர்த் திருவுலகிற் பெரியோன்;
ஏதமேதும் அறிகில்லான்; இருங்குணத்தின் குன்றனான்;
மூதறிஞன் மனம்முகரா மூக்கென்ன மூக்கே !
மோகனனை முகராத மூக்கென்ன மூக்கே !! ச

சொந்தவர சிந்தியத்தாய் சூடிமுடி தாங்க,
முந்தையோர் காணாத முறையிலொரு நற்போர்,
எந்தவுல கும்வியக்க இயற்றுபெருங் காந்தி,
நந்தலைவன் புகழ்பாடா நாவென்ன நாவே !
நாயகனை ஏத்தாத நாவென்ன நாவே !! ரு

தள்ளரிய பெருநீதித் தனியாற்றை மண்டும்
பள்ளமெனும் தகையானை—பாரதத்தாய் ஈன்ற
எள்ளுகுணம் இல்லானை—எம்மானை—காந்தி
வள்ளல்தனை—வாழ்த்தாத வாயென்ன வாயே !
மகாத்துமனே யென்னாத வாயென்ன வாயே !! சு

மாந்தருய இப்புவியில் வந்துதித்த வள்ளல் !
சாந்தகுணன்! தண்ணளியன்! சபர்மதிக்கோன்! தாவிலான்!
ஏந்துபுகழ் மோகனப்பேர் எம்பெருமான்! ஈடிலான்!
காந்திதிரு முன்குவியாக் கையென்ன கையே !
கழலிணைகள் பற்றாத கையென்ன கையே !! எ

பொய்வளரும் நெஞ்சினர்க்குப் புறமானான்! பூதம்
அய்வகையும் நன்றடக்கி ஆண்ட திருவாளன்!
உய்வறியாச் சிறுதகையேன் உளமிருந்த காந்தி !
மெய்யுடையான்! மெய்வணங்கா மெய்யென்ன மெய்யே!
மேதகவோன் தாள்வீழா மெய்யென்ன மெய்யே!! ௮

செயிர்தீரப் பண்டரசு செய்துலகின் முடிபோல்
அயர்வின்றி ஒளிர்ந்தநம தன்னையின்று மண்ணில்
துயர்தாங்கல் ஆற்றாமல் தூய்பணிமேற் கொண்ட
உயர்காந்தி தனை, நினையா உளமென்ன உளமே !
உத்தமனைச் சிறையிருக்கா உளமென்ன உளமே !! ௯

இருந்தகைமை இந்தியநா டின்றேழை யாகி,
வருந்துதுயர் தீர்த்திடவே, மாதவத்தோர் வாடா
அரண்மனையிற் கொலுவிருக்கும் அருமந்த சீர்த்தி
அருந்தவனை அணுகாத அறிவென்ன அறிவே !
அறக்காந்தி சீரறியா அறிவென்ன அறிவே !! ௧௦



# 9. ஆடாமோ ஊசல்

பாடிய தேதி :—ஆங்கிரச ஆவணி கசு உ

தேர்ந்த அறந்தாங்கு செய்ய தமிழ்ப்பாவால் ;
சாந்த குணம்படைத்தோன்! சபர்மதிவாழ் எம்மான் !
வேந்தர் விறற்படையும் வெறுங்கை கொடுவீழ்த்தும்
காந்தி கழல்பாடி ஆடாமோ ஊசல் !
கருணைக் கழல்பாடி ஆடாமோ ஊசல் ! க

பாகு பொருவுறும் பசிய தமிழ்ப்பாவால் ;
மாகந் தனைப்போர்த்த மாண்குணத்துக் காந்தி !
போகந் துறந்தபெரும் புனிதன் ! புகழாளன் !
ஏகன் எழில்பாடி ஆடாமோ ஊசல் !
எங்கோன் எழில்பாடி ஆடாமோ ஊசல் ! உ

கற்றைப் புகழ்சேர்ந்த கனிந்த தமிழ்ப்பாவால் ;
இற்றைப் படியைநனி ஈடேற்ற வந்த
செற்றந் தவிர்ந்ததிருச் சீராளன் காந்தி !
ஒற்றைக் கதர்பாடி ஆடாமோ ஊசல் !
ஒண்மைக் கதர்பாடி ஆடாமோ ஊசல் ! ௩

கொள்ளை நலமார்ந்த கொஞ்சு தமிழ்ப்பாவால் ;
அள்ளி உயர்அறத்தை அவனி நனிவாழக்
கிள்ளைக் கனிமொழியில் கிளத்தும் அருங்காந்தி !
வள்ளல் வளம்பாடி ஆடாமோ ஊசல் !
மன்னன் வளம்பாடி ஆடாமோ ஊசல் ! ச

திரட்டி வடித்தசுவைச் சிறந்த தமிழ்ப்பாவால் ;
மருட்டு புலன்வென்ற மாகாந்தி ! மண்ணிற்
புரட்டும் உருட்டுமறப் புக்கொழிய ஆழி
உருட்டும் கரம்பாடி ஆடாமோ ஊசல் !
உதவுங் கரம்பாடி ஆடாமோ ஊசல் ! ரு

அருமை அழகிளமை ஆனநலன் யாவும்
பெருகும் இனித்தசுவைப் பெரிய தமிழ்ப்பாவால் ;
உரிமை தனைப்பெறவே உழைக்கும் உயர்காந்திப்
பெரியோன் பெயர்பாடி ஆடாமோ ஊசல் !
பெம்மான் பெயர்பாடி ஆடாமோ ஊசல் ! சு

மருவு கொழுநரெழில் மழைக்கை வளைக்கைபால்
ஒருவா வகைபிடித்தே ஒப்பில் தமிழ்ப்பாவால் ;
பொருவார் புவியிலிலாப் புனிதன் அருங்காந்தி !
ஒருவன் திறம்பாடி ஆடாமோ ஊசல் !
உண்மைத் திறம்பாடி ஆடாமோ ஊசல் ! எ

சினவேல் விழியாடத் திகழ்முத்தம் சிந்தக்
கனிவாய் அமிழ்தொழுகக் கன்னித் தமிழ்ப்பாவால் ;
இனிய மொழிபகரும் எந்தைசீர் ஏய்ந்த
அணியார் அறம்பாடி ஆடாமோ ஊசல் !
ஐயன் அறம்பாடி ஆடாமோ ஊசல் ! ௮

எம்மை உலகத்தும் ஈடில் தமிழ்ப்பாவால் ;
நம்மை உயர்த்துதற்கு நானிலத்தில் நண்ணினோன் !
அம்மை அரசுபெற அருளு பெருங்காந்தி !
செம்மைச் செயல்பாடி ஆடாமோ ஊசல் !
திண்மைச் செயல்பாடி ஆடாமோ ஊசல் ! ௯

ஆடாமோ ஊசல் ! அருமைசெறி தமிழ்ப்பாப்
பாடாமோ ! பாடிப் பரவாமோ ! பண்பிற்
கூடாமோ ! கூடிக் கூர்ஜரனைக் கூறி
ஆடாமோ ! பாடி ஆடாமோ ஊசல் !
அந்தணன்சீர் பாடி ஆடாமோ ஊசல் ! ௧௦



# 10 தோழிப் பேச்சு

## ஆசிரியத் தாழிசை. வினாவிடை

பாடிய தேதி :—ஆங்கீரச ஆவணி கஎ-உ

அன்பு கயிறு அவனிபிணி காந்தி
என்பு நெகிழ இனியஉரை பகரும்
நம்பன் புகழ்பாடி ஆடாமோ! தோழீ! க

நம்பன் புகழ்பாடி நாமடைவ தென்னே!
இம்பர் உலகியற்கை அறியாயோ ஏடி!
வம்பே அவன்பெயரை வழுத்துதலும் தோழீ! உ

வம்பின் பொருள்மணமே! வழுத்தியது வாய்மை!
செம்ப வளவாய்நாம் திறந்தவனைப் பாடின்
உம்பர் நமைமதிப்பர் உறுதியடி தோழீ! ங

உறுதி கடைப்பிடித்த ஓராடை ஆண்டி
விறலா யிடும்பையே மேவுமவன் பின்னே
உறின்இவ் உலகின்பம் ஏதடியோ! தோழீ! ச

ஓராடை ஆண்டியையே உலகதனில் விரிந்த
பாராள்வோர் என்போரும் பாவியவன் தன்னைத்
தீராச்சீர் செய்தகதை கேட்டிலையோ! தோழீ! ரு

தீராச்சீர் என்னே! சிறைபிடித்தார் அக்கணமே!
தோதார் செய்திட்ட சிறப்பின் பொருள்தானென்!
சிரானைச் சேர்ந்திடிலோ சிரமமே! தோழீ! சு

அன்னை விலங்கறுக்க அரியபணி கொண்ட
மன்னன் தனைத்தொடர்தல் மகிழ்வோ! வருத்தமோ!
என்ன பொருளடிநீ இயம்புரைக்குத் தோழி! ௭

பொருள்நீ அறியாயோ! புவியின்பம் வேண்டின்
அருளும் அவன்சீர் அடிச்சுவடு பற்றி
இருளு சிறைகிடக்க இயலுமோ! தோழி! ௮

வேற்றூர் அரசதனில் விளையுமோ இன்பம்!
ஏற்கா மொழிபகர்தல் என்னேடி! ஆட்சி
ஏற்காமுன் இன்பம் ஏதடியோ! தோழி! ௯

அம்மா சிறைத்துயரும் அறிவிலிகள் கையடியும்
நம்மாற் பொறுக்கரிது! நாடரசு பெற்றால்
சும்மா நுகரலாம்! துன்பமிலைத் தோழி! ௧௦

காந்தி மிகமதிக்கும் கத்தருடை கட்டுவாய்!
மாந்த ருயர்நல வழியதுவென் றுணருங்
ஏந்தும் எழில்வாய்ந்த எனக்கினிய தோழி! ௧௧

போடி!யுன் கத்தர் பொறுக்குமோ! பூநுண்
வாடும் அருமருங்குல்! மாயம்நீ சொல்வதெல்லாம்!
ஏடி! இடைபொடியின் யார்பொறுப்புத் தோழி! ௧௨



# 11 ஏர்வாடாக்கோவில்

---

## திருத்தாண்டகம்

பாடிய தேதி :—ஆங்கிரச ஆவணி கஅ-உ

பாரதத்தாய் அருமந்த பாலன் கண்டாய்!
　　பண்டைவாழ் வவள்பெறற்குப் பகரொணுத!
ஆஞரே இன்பமென அடைந்தான் கண்டாய்!
　　அவனியெலாம் நனிவாழ அருள்வான் கண்டாய்!
பேரறிவு படைத்ததனிப் பெரியோன் கண்டாய்!
　　பிறர்க்கெனவே வாழுபெருந் தகையோன் கண்டாய்!
ஏருழவே என்தொழிலென் றிசைப்பான் கண்டாய்!
　　ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! க

புத்திரிபாய் பெற்றெடுத்த புனிதன் கண்டாய்!
　　போர்ப்பந்தர் பிறந்தருளும் புகழோன் கண்டாய்!
மெத்துபுகழ்ச் சபர்மதியில் மேயோன் கண்டாய்!
　　வேற்றரசை வேர்கல்ல வல்லான் கண்டாய்!
வித்தகர்க்கெல் லாந்தலைமை பூண்டான் கண்டாய்!
　　மெய்த்திருவா வெந்துயரே கொண்டான் கண்டாய்!
எத்தரையும் ஈடெவரும் இல்லான் கண்டாய்!
　　ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! உ

மாதவர்க்குக் கஸ்தூரி மணாளன் கண்டாய்!
மாண்டகுணம் அத்தனையும் வாய்ந்தான் கண்டாய்!
தீதுபுரி மாக்களுமே திருந்த நீதிச்
சீரறத்தை உலகறியச் செய்வான் கண்டாய்!
போதம்வளர் புந்தியினோர்க் கணியன் கண்டாய்!
பொல்லாத மாந்தர்க்குச் சேயான் கண்டாய்!
ஏதருமை என்னவினை செய்வான் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! ௩

சொல்லாருஞ் செம்மேனித் தோன்றல் கண்டாய்!
சுக்கிலவில் புரட்டாதி பதினெட் டாநாள்
எல்லாரும் இன்படையப் பிறந்தான் கண்டாய்!
என்னனையார் இடர்களைந்தே எடுத்தாட் கொண்ட
நல்லார்கள் தினம்வணங்கும் நம்பன் கண்டாய்!
நற்றவத்தால் அவனையடை பேறு பெற்ற
இல்லாரும் கஸ்தூரி தோழன கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! ௪

மக்களன்று வகுத்தபல சமய பேத
மாக்கடலை நனிதுருவி; பணியே போன்ற
மிக்கசெயற் போறத்தை உலகம் ஏற்க
விரித்துரைக்கும் மேதகைகொள் ஞானி கண்டாய்!
பக்கமுளார் இவனின்ன மதத்தான் என்று
பளிச்சென்று காண்பதற்குப் புறத்தே தீட்டும்
எக்குறியும் திருநெற்றி யிடாதான் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! ௫

மன்னவர்க்கும் அஞ்சாத வலியோன் கண்டாய்!
மகாத்மனெனும் புகழ்பூண்ட வள்ளல் கண்டாய்!
அன்னைதிருப் பணியேற்ற அதனால் ஐயோ!
அருள்வடிவத் திருமேனி எழில்வருந்தப்
பன்னரிய துன்பமெலாம் வலிய ஏற்றுப்
பன்னெடுநாட் சிறையிருந்த பரமன் கண்டாய்!
என்னுளத்தே குடியேறி யிருந்தான் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! ௬

ஓங்குகடல் உலகிலுள உயர்ந்தோர் எல்லாம்
உலகினுக்கே ஒருவனிவன் என்னும் மேன்மைப்
பாங்கனைப் படைத்திட்டோன் கண்டாய்! ஆனால்;
பாரிலுயர் நாகரிகர் தாமே என்னும்
ஆங்கிலத்தார் அரசதனில் குற்றம் செய்யும்
அவருறையும் சிறைக்கறுப்புக் குல்லாய் கண்டாய்!
ஏங்குகின்ற ஏழையர்பங் காளன் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! ௭

உள்ளத்தாற் பொய்யாதே ஒழுகி ஒரும்
உலகறிஞர் உள்ளமெலாம் உள்ளான் கண்டாய்!
கள்ளத்தார் காணரிய கடலான் கண்டாய்!
கருதரிய பெருங்குணத்துக் காந்தி கண்டாய்!
பள்ளத்தே பாய்நீர்போல் அறத்தை இந்தப்
படிநிறையப் பாய்ச்சுவோன் கண்டாய்! பாபம்
எள்ளத்தீ வினையறுக்கும் ஏந்தல் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! ௮

தென்னாப்பி ரிக்காவில் உரிமைக் காகச்
சிறையிருந்தான்! பல்லுடையும் பட்டான் கண்டாய்!
அந்நாளில் எங்களரும் தமிழர் செய்த
அரியபணி ஏற்றருளும் அண்ணல் கண்டாய்!
ஒன்னார்கள் கண்டஞ்சும் ஒற்றைக் கத்தர்
உடுத்தாடை பலசுமக்கும் ஓரார் நாட்டும்
எல்நாட்டி மீண்டபெரும் எழிலோன் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! ௬

நமையடக்க இராணுவமே துணையாக் கொண்ட
நம்நலமே நாடிநமை ஆள்வோர் என்போர்
தமையுடைக்கச் சத்தியமே படையாக் கொண்டு
தனிப்பெரிய போர்வகுத்த தக்கோன் கண்டாய்!
நமைப்புரக்கும் மோகனப்பேர் நல்லோன் கண்டாய்!
நற்பொருளெ லாமொன்றுத் திரண்டான் கண்டாய்!
இமயமுதல் குமரிக்கோர் மன்னன் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! ௧௦



# 12. சபர்மதி.

---

## திருத்தாண்டகம்.

பாடிய தேதி :—ஆங்கிரச ஆவணி கசு-உ

போறிவு முகப்பொலிவிற் றேன்றும் தோன்றும் !
பெரியதிரு மனமுறையில் தோன்றும் தோன்றும் !
வீரமுயர் பெருஞ்செயலில் தோன்றும் தோன்றும் !
மேதகவு யாவினுமே தோன்றும் தோன்றும் !
ஏரொழுகு செம்மேனி இலங்கித் தோன்றும் !
இனியகதர் உடையொன்றே இடையில் தோன்றும் !
போருமை புவிவியக்கும் புகழில் தோன்றும் !
பூவிலுயர் சபர்மதியெம் புனித ஞர்க்கே. க

கன்னுணும் கனிந்தஉளம் தோன்றும் தோன்றும் !
கருணைபொழி இருவிழிகள் தோன்றும் தோன்றும் !
எந்நாடும் புகழுமருந் தோற்றம் தோன்றும் !
இன்னமுதை உகுத்திடுசொல் எதிர்ந்து தோன்றும் !
ஒன்னுரை அச்சுறுத்தும் ஒழுக்கம் தோன்றும் !
உருட்டுகின்ற ராட்டினெவி ஓங்கித் தோன்றும் !
பொன்னரும் திருமேனி பொலிந்து தோன்றும் !
பூவிலுயர் சபர்மதியெம் புனித ஞர்க்கே. உ

அன்றலர்ந்த தாமரைபோன் முகமும் தோன்றும் !
அதன்னடுவே அமுதருளும் இதழும் தோன்றும் !
மின்தயங்கு வெண்முத்தம் விளங்கித் தோன்றும் !
மென்முறுவல் வீழ்ந்தபல்லின் இடையே தோன்றும் !
மன்றல்புரி கஸ்தூரி மருங்கு தோன்றும் !
மாதேவ தேசாயும் அருகே தோன்றும் !
பொன்தயங்கு புகழ்மேனிப் பொலிவு தோன்றும் !
பூவிலுயர் சபர்மதியெம் புனித னூர்க்கே. ௩

மெய்ம்மணக்கும் செம்பவளத் திருவாய் தோன்றும் !
மேலைநாள் முனிவர்தவ வடிவே தோன்றும் !
கய்யிலுயர் நூல்தோன்றும் வட்டம் தோன்றும் !
கத்தருடை முழங்காற்கு மேலே தோன்றும் !
மெய்யினது தூய்மையெலாம் விளங்கித் தோன்றும்
விண்முடு விரிந்தபெரும் புகழும் தோன்றும்!
பொய்வளரா மனத்தடியார் புடையே தோன்றும் !
பூவிலுயர் சபர்மதியெம் புனித னூர்க்கே. ௪

நாவாழப் புலவர்புகழ் வடிவு தோன்றும் !
நளினமலர்பொருவுமொளி முகமும் தோன்றும் !
மேவாரை வீழ்த்துகுறு நகையுந் தோன்றும் !
மெல்லமிழ்தம் ஒழுகஉரை தருநாத் தோன்றும் !
ஓவாதே ராட்டுருட்டு கையும் தோன்றும் !
ஒருபெரிய கதராடை இடையும் தோன்றும் !
பூவாழ நடந்தருளும் அடியும் தோன்றும் !
பூவிலுயர் சபர்மதியெம் புனித னூர்க்கே. ௫

போராற்றல் படைத்ததனிப் பெருமை தோன்றும் !
பேரறிவும் பெருங்குணமும் பிறங்கித் தோன்றும் !
பாரேத்தும் அரியஉயர் கொள்கை தோன்றும் !
படிறின்மை கபடமற்ற பேச்சில் தோன்றும் !
நாராற்றும் மக்களுய நல்ல வாய்மை
நாகரிகம் தண்மையிவை படையாக் கொண்ட
போராற்றல் புவிவியக்கத் தோன்றும் தோன்றும் !
பூவிலுயர் சபர்மதியெம் புனித னூர்க்கே ௬

திருமுகத்தா மரைதோன்றும் அதிலே பூத்த
செங்கனிவாய்ச் சேதாம்பல் பூவும் தோன்றும் !
கருணைவிழிக் கருங்குவளை இரண்டு தோன்றும்!
கனிந்தசுவைத் தேன்பிலிற்றும்முல்லை தோன்றும்!
பெரியஇரு காதலப்பங் கயங்கள் தோன்றும் !
பெருமைதரும் அடிக்கமலத் துணையும் தோன்றும்!
பொருவரிய பூமேனி பொலிந்து தோன்றும்!
பூவிலுயர் சபர்மதியெம் புனித னூர்க்கே. ௭

அக்கமதில் அருள்விளங்கித் தோன்றும் தோன்றும் !
அகம்புறமும் அருந்தூய்மை தோன்றும் தோன்றும்!
எக்கணமும் புன்சிரிப்பே இலங்கித் தோன்றும்!
இனிமைதரு செய்யவாய் எழிற்சொல் தோன்றும்!
பக்கமெலாம் மெய்யடியார் கூட்டம் தோன்றும் !
படிமுழுதும் நனிவாழும் பான்மை சூழும்
பொக்கமிலாத் திருவுளமே தோன்றும் தோன்றும் !
பூவிலுயர் சபர்மதியெம் புனித னூர்க்கே. ௮

சிறியதொரு கத்தர்ப்பை பக்கம் தோன்றும்!
தினம்படிக்கும் ஒருகீதை அதனுள் தோன்றும்!
மறையெழுதும் ஒருசிறிய குச்சி தோன்றும்!
வனப்புயர்ந்த இராட்டொன்று திருமுன் தோன்றும்!
கறையெதுவும் இல்லாத கத்தர் மாலைக்
கயிற்றுடனே கடிகாரம் ஒன்று தோன்றும்!
பொறியடக்கி ஆண்டபெரும் தகைமை தோன்றும்!
பூவினுயர் சபர்மதியெம் புனித னூர்க்கே. ௯

பாக்கியமார் உலகமெலாம் வாழ நீதி
பகரிய பவளவாய் தோன்றும் தோன்றும்!
ஊக்கம்நிறை ஓயாத சிரிப்பு மூரல்
உடையினிடை ஒளிவீசி ஓங்கித் தோன்றும்!
மூக்கிலணி காம்புடைக்கண் ணாடி தோன்றும்!
மொய்ம்பெழிலார் சிறியதவ வடிவு தோன்றும்!
போக்கரிய தொல்லறத்தின் புதுமை தோன்றும்!
பூவினுயர் சபர்மதியெம் புனித னூர்க்கே. ௧௦



# 13. கடவுளை வேண்டல்.

பாடிய தேதி :—ஆங்கீரச புரட்டாதி ௧-உ

அறுசீர் விருத்தம்.

உலகமெலாம் படைத்தாய்நீ! உலகமெலாம்
உள்ளாய்நீ! உலகில் உள்ள
அலகில்பொருள் அனைத்தையுமே ஆக்கினைநீ!
உலகுயிரை ஆட்டு விக்கும்
புலமுழுதும் நீ!என்பது உண்மையெனில்
கடவுளே! பொருவில் உன்னல்
தலைமகனெங் காந்தியெனும் தண்ணளியின்
உயிர்புரக்கத் தவறி டாதே. ௧

ஆற்றலென்பர்; சக்தியென்பர்; வலிமையென்றும்
அறைந்திடுவர்; அன்னே! உன்னை;
ஏற்றமிழி வில்லாமல் எல்லோரும்
சமம்பெறவே எண்ணி, ஈடில்
சாற்றரிய பெருமையுடைத் தன்னுயிரும்
கொடுப்பதற்குச் சமைந்தான் காந்தி!
போற்றியவன் உயிர்காவா தொழிந்துபழி
பூணுதே; பொருவில் தாயே! ௨

"உடலீவேன்; பொருளீவேன்; உயிரினையும்
ஈந்திடுவேன்;" என்று பல்லோர்
மடமடென வழுத்திடுவார் வாயதனால்;
செய்கைக்கு வாரார் அன்னார்.
திடமுடைய சீர்க்காந்தி செப்புமொழி
தப்பாதான்; தெய்வ தங்காள்!
உடனெழுந்தவ் உத்தமனின் உளமுடித்தே
உயிர்காப்பீர்! உயிர்காப் பீரே! ௩

மண்ணில்நிகர் இல்லாத பாரதநல்
மாதாவே! மணியே போன்ற
எண்ணில்புகழ்ச் சான்றோரை ஈன்றனைபண்
டானாலும் ஈடி லாத
திண்ணமுடைக் காந்தியைப்போல் பெற்றனையோ!
மூடர்புரி தீண்டா மைக்கா
அண்ணலுயிர் விடநீதான் ஆற்றுவையோ!
தாயே!நீ அருளில் வாயோ? ௪

பொறுமைதனில் நிகரில்லாய் நீயென்பர்
புலவரெலாம்; பூமி தேவி!
அறியாமைப் படுகுழியில் வீழ்ந்திடுவோர்;
பாபங்கள் அனைத்தும் செய்வோர்;
குறையாளர் யாவரையும் சுமக்கின்ற
நீ,எங்கள் கோதி லாத
இறைகாந்தி பேரொளிகொள் சிற்றுருவப்
பொறையிழக்க இசைவாய் கொல்லோ! ௫

நிலவருளும் தண்சுடரே! நிலம்விளக்கும்
செங்கதிரே! நீவிர் எண்ணில்
பலகோடி நாளாவிவ் உலகறிவீர்;
என்றேனும் பாந்த இந்தத்
தலமதனில் தண்ணளியார் காந்திநிகர்
சான்றேனைக் கண்ட துண்டோ!
உலகறிய உரைத்தன்னுன் உயிர்காப்பீர்!
தருணமிது! உறங்கல் செய்யீர்! சா

மாநிலமே! வானெரியே! வருகாற்றே!
வயங்குபுகழ் வானே! நீரே!
மேனிலத்தின் வரையுயர்ந்து விளங்குகின்ற
பெருமலைகாள்! மேலோர் போற்றும்
கானிலுறை பறவைகாள்! கடுவிலங்கீர்!
பெருமரங்காள்! ககனம் வாழும்
மீனினங்காள்! இருசுடர்காள்! காந்தியுயிர்
காப்பதற்கு மேவீர் கூடி! எ

அம்பலத்தே ஆடிடுவாய்; அரங்கத்தே
தனிகிடப்பாய்; என்பார் உன்னை!
நம்பிடுவார் துயர்களைவாய் என்றிடுவார்;
நல்லடியார் உள்ளம் என்னும்
செம்பதுமக் கோவிலுறை தேவே! தீத்
தீண்டாமை வேர்அ றுக்கும்
எம்பெருமான் காந்தியெனும் இந்தியர்நல்
உயிர்காப்பாய்! ஈசா! ஈசா! அ

காந்தியுயிர் காவேயேல், கடலுலகம்
இன்றுவரைக் கண்டிடாத
சேர்ந்தபழி பூண்பாய்நீ! தேவே! 'நீ
இல்லை'யெனச் செப்புகின்ற
மாந்தரும் 'நீ இருக்கின்றாய்' எனத்தெளிய
மனங்கொண்டாய் ஆனால், எங்கள்
சாந்தகுணப் பெருங்கடலைத் தலத்திலுயர்
தனிப்பொருளைக் காப்பாய்! காப்பாய்! ௯

உலகுயிர்கள் தொறுங்கலந்தே உறைகின்ற
ஒருபொருளே! ஒருவன் இந்தத்
தலமதற்கே எனும்பெரியான்; சத்தியமே
கமழ்வாயான்; சாந்தம் என்னும்
அலகில்குணக் குன்றனையான்; அருளன்றி
அறியாதான்; அறமே செய்வான்;
கலைமுழுதும் நனியுணர்ந்தான்; காந்தியவன்
ஆருயிரைக் காவாய்! காவாய்! ௧௦

குறிப்பு:—கடவுளை வேண்டல் என்னும் தலைப்பின் கீழுள்ள இப்பாக்கள் காந்தியடிகள், தீண்டாதார் எனப்படுவோர் தனித்தொகுதி முறை ஒழிப்பான் கருதி உண்ணாவிரதங்கொண்டு உயிர்விடவும் முன்னின்றதை முன்னிட்டுப் பாடப்பெற்றவை.



# 14. உண்ணாவிரத முடிவு

---

பாடிய தேதி:—ஆங்கீரச புரட்டாசி கரு-உ

அறுசீர் விருத்தம்.

பெரியோர்கள் திருவுள்ளம் பிழையாதென்
றுலகுணரப் பிறங்கக் காட்டும்
அரியோனே! 'தீண்டாதார் பிரிவுமுறை
அகற்றீரேல் வாழேன்' என்று
உரைகூறி உண்ணாமை மேற்கொண்டு
நாடெல்லாம் ஒன்று கூடிச்
சரிதானென் றிடவெற்றி சார்காந்தி!
பல்லாண்டு தலத்தில் வாழ்க! க

"செயற்கரிய செய்வர்பெரி யா"ரென்னப்
புலவர்பிரான் செப்பும் உண்மை
மயக்கமற உலகுணரக் காட்டினைநீ!
மாகாந்தி! மண்ணின் மீது
தயக்கமின்றிக் கொள்கைக்காச் சத்தியங்கொண்
டுயிர்விடவும் சமைந்த சான்றோர்
சயக்கொடிநாட் டிடுவரிதிற் சற்றுமையம்
இல்லையெனல் சரியே யன்றோ? உ

அரியவினை யாதொன்றும் அவனியிலே
நினக்கில்லை! ஐயா! யாரும்
கருதரிய காரியத்தைக் கடிதினில்நீ
முடித்திட்டாய் காந்தி வள்ளால்!
பெரியஆ சாங்கத்தார் பெரிதாய்ந்து
முடித்தசெயல் பிளப்ப தென்ப
தரிதரிது! அறவடிவாய் அவதரித்த
நினக்கன்றி யார்க்கும் அம்மா! ௩

யார்வல்லார் ஆங்கிலத்தார் செய்தமுடி
வதைமாற்ற ; அறமே பூண்ட
போர்வல்லாய்! புண்ணியனே! போர்ப்பந்தர்
பிறந்தருளும் புனித வாழ்வே!
பார்வல்ல மன்னவர்க்கும் பன்னரிய
செய்கைதனைப் படையி லாத
நார்வல்ல சிற்றுருவம் நண்ணுவித்தல்
காட்டினைநீ! நற்பு விக்கே! ௪

மண்முழுதும் தனியாளும் மன்னவர்க்கும்
ஆகாத வலிமை யெல்லாம்
உண்ணிறைய ஒளிபெருக்கி ஊனொடுக்கிப்
புலனையெலாம் ஒல்லும் ஆற்றல்
கண்ணடக்கி மற்றவர்க்கே கடலுலகில்
வாழுபெருங் கவின மைந்த
எண்ணறிஞர்க் கெளிதெனஇன் றெல்லவர்க்கும்
காட்டினைநீ! எந்தாய் காந்தி! ௫

தொடத்தகார் எனச்சொல்லும் நம்மரிய
　　துணைவர்தனின் தொகுதி நாட்டைக்
கெடுத்திடுமச் சோதரரைக் கீழ்நிலைநின்
　　றுயர்த்தாது கீழ்மேல் என்னும்
மடத்தையறப் போக்காது வளர்த்திடுமேல்
　　மேலுமென மனத்துட் கொண்டு
திடத்துடனல் உயிர்விடவும் துணிந்துநின்று
　　சிறந்தவெற்றி சேர்ந்தாய் காந்தி! ௬

வாய்கொண்ட மட்டும்தீண் டாதார்க்கே
　　வாழ்கின்றேம் என்று பல்லோர்
பேய்கொண்டார் போல்மேடைப் பேச்சிடுவார்!
　　செய்கையெனில் பின்னே போவார்!
தாய்கொண்ட தளைநீக்கத் தனிச்சிறைபைச்
　　சார்ந்தோனே! தீண்டா தார்க்கா
நீகொண்ட செயல்மறக்க நிலத்திலினி
　　எவர்க்கொண்ணும்? நேயக் காந்தி! ௭

கோயிலிலே நுழையுரிமை தீண்டார்க்கு
　　வேண்டுமெனக் கூட்டம் கூடி
வாயதனல் வகுத்துரைப்பார்! மாபெரிய
　　தீர்மானம் வரைவார்! ஆனல்,
ஏயசெயல் ஒன்றுற்றுர்! இடரொன்றுல்
　　ஓடிடுவார்! ஏத்தால்! நின்போல்
நேயமுளார்க் கல்லாமல் நேர்வெற்றி
　　பெறலெளிதோ? நீள்சீர்க் காந்தி! ௮

நினக்கரிய செயலிந்த நிலத்திலில்லைப்
    பிறர்வாழ்வே நிதம்வி ரும்பென்
மனக்கினிய மாமணியே! மாத்துமப்பேர்
    வாய்த்தபுகழ் வள்ள லே!நம்
வனப்புடைய பாரதத்தாய் மணிமுடிபெற்
    றரசாள்நாள் சேணில் இல்லை
தனக்கெனவா ழார்நினைப்புச் சமைந்திடுதல்
    சாதமிதில் தடையும் உண்டோ! ௯

மண்ணனைத்தும் அறம்பெருகி மக்களெலாம்
    வாழ்தற்கும் மன்ம கட்குக்
கண்ணனைய பாரதத்தாய் கைத்தளைபோய்ப்
    பண்டைநாட் கவினை டைந்தே
என்னுடைய முடிசூடி இனியஅர
    செய்துதற்கும் இந்நி லத்தில்
தண்ணளியே சார்ந்தொழுகு தனிக்காந்தி!
    பல்லாண்டு தழைத்து வாழ்க! ௧௦

குறிப்பு :—உண்ணா விரதத்தை வெற்றிகரமாக முடித்த பிறகு இப்பதிகம் பாடப்பட்டது.



# 15. சிறை வாழ்வு.

---

பாடிய தேதி:—ஆங்கிரச புரட்டாதி உஉ-வ

## எண்சீர் விருத்தம்.

பெற்றெடுத்த தாய்நாட்டின் தொண்டு பூணல்
பெரியகடன் ஆனாலும், பெரியோய்! காந்தி!
நற்றவம்செய் நீதலைமை ஏற்றுப் பண்டை
நாளிலிலாப் புதுமுறையில் நடத்தாய் என்னில்;
கற்றவரும் மற்றவரும் இன்ப வாழ்க்கைக்
கரைகண்ட திருவினரும் சிறைக் கூடத்தைப்
பற்றியிருந் தொழுகியங்குப் பற்பல் துன்பம்
பட்டடங்கிக் கிடத்தலிந்தப் பாரில் உண்டோ! க

எத்தரையும் ஈடில்லா இந்த நாட்டை,
ஏனோர்கை மீட்டல்கடன் எனினும், ஐயா!
மெய்த்தலைமை நீபூண்டு சமர்மு கத்தில்
மேலவனே நின்றுதனி நடத்தாய் என்னில்;
மெத்தையினில் கண்வளர்ந்த மேலோர் எல்லாம்
மிதிப்பதற்கும் தகுதியிலாக் கயிற்றுப் பாயில்
கைத்தலைக்கு வைத்துறங்கும் காட்சி ஒன்று
கனவினிலும் காண்பதுவோ காந்தி வள்ளால்! உ

மட்டில்புகழ்ப் பாரதத்தாய் விலங்கு போக்கல்
மக்கள்கடன் ஆனாலும், வள்ளலே! நீ
கிட்டி, யறங் கொண்டதொரு போர்வகுத்து, இக்
கிழப்பருவம் தனில்முகத்து நில்லாய் என்னில்;
கட்டிலின்மேல் பூவணையில் தென்றல் உண்டு
கவினுயர்ந்த மாளிகையில் துயின்றோர் எல்லாம்
எட்டடிகொள் சிற்றறையிற் பூட்டப் பட்டே
இருள்கிடத்தல் நிலத்துண்டோ ஏந்தால் காந்தி! ௩

கொத்தடிமை நீக்குதற்கு முயலல் இந்தக்
குவலயத்தில் எல்லவர்க்கும் கடனென் றாலும்,
புத்திரிபாய் பெற்றெடுத்த புனிதக் காந்திப்
புண்ணியனே! நீதலைமை பூணாய் என்னில்;
புத்துருக்கு செப்பன்றி வேறு காணாப்
பொருவரிய பெருவாழ்க்கை பூண்டோர் எல்லாம்
கைத்துணையென் னையுமறியா மிடிகூர் வாழ்வைக்
கடனாகக் கருதிடுதல் தரையில் உண்டோ! ௪

சாற்றரிய பெருமையுடைத் தாய்விலங்கைத்
தகர்த்தல்கடன் ஆனாலும், சான்றோய் காந்தி!
ஆற்றல்நிறை அருந்தவமே உருவெடுத்த
அந்தண! நீ அமர்த்தலைமை அடையாய் என்னில்;
பாற்கடலும் தயிர்க்கடலும் பருகி வாழ்ந்த
பாங்குடைய மக்களெலாம் பரிய துன்பம்
ஏற்றெளிய துளிமோரும் அறியா வாழ்க்கை
இயைந்திடுதல் நினைப்பதற்கும் எளிய தாமோ! ௫

மகவுபல ஈன்றுபெரும் புகழ டைந்த
மாதாவின் துயர்களைதல் கடனென் றாலும்,
தகவுடையாய்! சபர்மதியெம் தவமே! காந்தித்
தண்ணளியே! தலைமைநீ தாங்காய் என்னில்;
வகைவகையாச் சுவைமிக்க உணவ ருந்தி
வாழ்ந்தவுயர் மக்கள்பலர் சிறைக்கூ டத்தில்
மிகவெளிய புளிச்சாற்றில் குழைத்துச் சோற்றை
விழுங்கியுயிர் வாழ்ந்திடுதல் உண்டோ! உண்டோ!! சு

சிறைப்பட்ட தாய்நாட்டை மீட்டல், மக்கள்
சிறந்தகடன் ஆனாலும், சீரார் காந்தி!
அறப்பெரிய அமரொன்றை அரிதிற் கண்டே
அதன்தலைமை நீபூணாய் ஆனால்; ஐயா!
குறிப்பறிந்து பணியாற்ற அருகே காத்துக்
கொண்டுநிற்கும் வினையாட்கள் பலரை ஆளும்
பொறுப்புடையார் சிறைநடத்தும் கடமை பூண்ட
புன்மனிதர் கீழிருத்தல் புவியில் உண்டோ! எ

முன்னுலகின் முடிமணியாய் மிளிர்ந்த தாயின்
மூண்டபிணி போக்கிடுதல் கடனென்றாலும்,
தன்னிகர்நீ தலைநின்று நடத்தாய் என்னில்;
சபர்மதிவாழ் தவமுடைய காந்தி வள்ளால்!
மன்னவர்போல் பெருவாழ்வு வாழ்ந்துயர்ந்த
மதிநிறைந்த புகழுடைய மக்கள் எல்லாம்
புன்சிறையுட் செயலிழந்து துன்பம் பூண்டு
பூட்டறையிற் கிடந்திடுதல் பூவில் உண்டோ! அ

அருமையுடை அன்னைக்கு வாழ்வு நல்கல்
அறிஞர்கடன் ஆனாலும், அவனிக் கெல்லாம்
பெரியவனென் றுலகுபுகழ் பெரியோய்! காந்தி!
பெருந்தலைமை பெற்றநீ பிறங்காய் என்னில்;
பிரிவறியாக் காதல்புரி துணைபி ரிந்து
பெருவாழ்வை அறமறந்து பெரியோர் பல்லோர்
இருளுசிறை எளிமையுடைச் சிறிய வாழ்வை
இனிதெனக்கொண் டிடுதலிந்தத் தலத்திலுண்டோ! கூ

பொறையுடைய இந்தியத்தாய் துயர்துடைத்தல்
புதல்வர்கடன் ஆனாலும், புலவர் போற்றும்
நிறையுடையாய் நீண்டபுகழ் நேயக் காந்தி!
நீதலைமை பூண்டுபோர் நிகழ்த்தாய் என்னில்;
கறையுடையார் தமக்காகக் காணப்பட்ட
காவலமை வறட்டுமலை சூழ்ந்த வேலூர்ச்
சிறையதனில் சிற்றறையில் இருந்து ராய
சொக்கலிங்கன் இப்பதிகம் சொல்லல் உண்டோ! கo



# 16. காந்தித் திருப்புகழ்.

பாடிய தேதி :—ஆங்கிரச புரட்டாதி உகூ-வ

தனண தனத்த தனண தனத்த
தனண தனத்த தனதாண

பெரியோய் அறத்தை உலகோர்க் கருத்து
பெருநேர் பிடித்த பெருமானே

பிழையோர் மிடுக்கை அடியோ டறுத்தல்
புரிவா னறங்கள் புகல்வோனே

கருவார் மணிக்கை யுறுதாய் விலங்கு
தகர்வான் சிறைக்குள் உறைவோனே

தனைநேர் தலத்தில் இலரே எனச்சொல்
தகுவாய் மைபெற்ற அதிதீரா

திருவே எழிற்புத் திரிபாய் பயந்த
சிறுவா புவிக்குப் பெரியோனே

திகழ்கா தலுற்றுன் னுடன்வாழ் நறுங்கஸ்
தூரிமான் சிறந்த மணவாளா

தரைகா தலிக்கும் வடிவே கருத்தில்
வளர்வாய் சகத்தின் குருநாதா

சமியேன் தனைச்செந் நெறியே செலுத்து
தவமோ கனென்னும் பெருமாளே. க.

தான தந்தன தானு தனுதன
தான தந்தன தானு தனுதன
தான தந்தன தானு தனுதன தனதான

பூத லத்துயர் சீலா நமோநம
போகம் விட்டருள் நாதா நமோநம
போதம் மிக்கசெங் கோவே நமோநம புகழ்சேரும்

மாது புத்திரி பாலா நமோநம
மாத வத்துரு வானுய் நமோநம
மாது யர்க்குடல் ஈவாய் நமோநம மணமாரும்

தீதில் கஸ்தூரி தேவா நமோநம
தேச மக்களின் சாமீ நமோநம
தீயர் தம்மையும் ஆள்வாய் நமோநம செகவாழ்வை

மோது வித்தக ஞானீ நமோநம
மூடு மெய்ப்புகழ் வாழ்வே நமோநம
மோக னப்பெயர்க் காந்தீ நமோநம பெருமாளே. உ

தாந்தா தாத்தன தனதான

சீர்சேர் வாழ்வது நமையீன்ற
தீந்தா யார்பெற உறநாடி
நார்கூர் ஓர்பெரும் அறப்போரை
நாட்டார் சேர்வகை நனிகண்டே
தார்வேய்ந் தோர்க்களந் தனில்முன்னே
தாஞ்போய் மாற்றலர் தவமேற்ற
ஏர்வா டாச்சிறை தனில்மேய
ஏர்சேர் காந்தியெம் பெருமாளே. ௩

ருக

*தனதன தத்த தனத்த தானன*
*தனதன தத்த தனத்த தானன*
*தனதன தத்த தனத்த தானன தனதான*

புலையரொ னச்சொல் லுலுத்தர் வீணர்கள்
புலையையு டைத்துப் பிறப்பி னுலுற
புலமைகி ளத்தல் அறுக்கு சீருற புலவோனே
கலகல வென்னப் பலப்பல் பேசிடு
பலருறை யிந்த நிலத்தில் வீணொரு
சிலசொலு மின்றிச் செலுத்து காரியக் குருநாதா
அலைகட லுற்ற தலத்தில் யாவரும்
அருளொட றத்தை அகத்தி லேகொள
அரிதினு ரைக்கும் அறத்தின் பேருரு அடைகோவே
மலையொடு மண்ணின் அனைத்து மாறினும்
நிலைகுலை வின்றி உரத்தி னேடுற
மனமதி லென்றும் இருக்கு மோகனப் பெருமாளே

*தானன தானத் தனதான*

காதலில் ஏல அறிவாளர்
காசினி வீசு பெருங்கீர்த்தி
ஓதிட வாழும் உரவோனே
ஒருரு வாக அறம்வாய்மை
ஆதிய யாவும் கிரண்டோனே
ஆதாரம் பூமிக் காவோனே
ஏதமில் நாத அருங்காந்தி
ஏழைபங் காளப் பெருமாளே. ரு.

தனதான தந்த தனதான தந்த
தனதான தந்த தனதான

முனைநாளு யர்ந்த முடிசூடி மண்ணின்
முழுதீட ழித்துத் தரையாண்ட

மொழியால டக்க முடியாத நன்மை
பொடுவாழ்ந்து யர்ந்த புகழ்சேர்ந்த

அனைதீங்க டைந்தின் றயலார்கை சிக்கி
அருவாழ்வி ழுந்து பிணியாதி

அவமான முற்றும் அவள்கீர்த்தி மக்கள்
அடைகீழ்மை தன்னை அடியோடு

நனிபோக்கி நண்ணும் உலகோடு நல்ல
நவமாக வுற்ற நடையாவும்

நமர்தாங்கக் கட்டு தளைபோக்கி யொப்பில்
நமதாவி யன்ன தனியன்னை

இனமான செம்பொன் மணியார்ந்த ரத்ன
எழிலார்சி றந்த அரிதாங்கும்

இரும்பீடந் தன்னில் முடிதாங்கி நிற்க
இயைகாந்தி வள்ளற் பெருமாளே. ௬

தான தனதன தான தனதன
தான தனதன தனதான

ஞால முழுவது நாடி யுயரிய
நாத னிவனெனு மரியோனே

ஞான முடையவ மான முடனம
நாடு தனையருள் உரவோனே

சீல மிதுவென ஏல உரைதரு
தேவ வினைபுரி திறலோனே

தேச விடுதலை நாடு செயலது
தீதி லறமென அறிவோனே

பால யமுதொடு தேனை எழிலுறு
பாவை யுறுதமி ழுதையாழைப்

பாடு கிளியினை வேயி னொலியோடு
பாகை நகுமொழி பகர்வோனே

காலை யெழுமொரு சூரி யனைநிகர்
காந்தி யடியவர் பெருவாழ்வே

காத லுடையகஸ் தூரி கணவநற்
காசி லுளமுறை பெருமாளே. எ

தனனதன தான தனனதன தான
தனனதன தான தனதான

சபர்மதியில் வாழும் அறவடிவ மான
தனிநிகரி லாத பெருமாள்காண்

தரைபுகழு சீல நிறையறிய ஞானத்
தவமுதல்வ னான பெருமாள்காண்

அபமெதுமு ருத அருளொழுகு மேனி
அமுதுகுசொல் ஆளு பெருமாள்காண்

புவனிதனில் யாரும் இணையுயர்வி லாத
அரியபணி மேவு பெருமாள்காண்

சபைமகிழப் பேசு பெருமையுடை யோரும்
தலைவணங்கு சீர்த்திப் பெருமாள்காண்

தனையுதவு நாடு தனையுயர்த்தற் காவி
தருசலிப்பி லாத பெருமாள்காண்

இபமரிக ளான எதிர்பொருத போதும்
இடிவரினும் மோது பெருமாள்காண்

இமயமலை யாதி குமரிமுனை காறும்
இருக்குமொரு காந்திப் பெருமாளே அ

தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன தனதான

மாமல ரூற்றிடு கந்தம தொத்தவர்
வாழுட லிற்செறி நல்லுயி ரொத்தவர்
மாதசை தன்னொடு மன்நக மொத்தவர் மதியாளர்
வாதுசெய் தெய்த்திடு சொற்பொரு ளொத்தவர்
மாகரும் புள்ளுறை இன்சுவை யொத்தவர்
வாளெரி கட்டையில் ஒத்தவ ரெள்ளினி லுறுமெண்ணெய்
ஆமென வுற்றவர் நன்மணி யுள்ளொளி
ஆனவர் நற்பசு தெள்ளமு திற்படு
ஆநெயை ஒத்தவர் அன்பினில் இத்தரை தனில்வாழும்
யாருநி கர்க்கலர் புன்பிரி வென்னுமை
யாதெனக் கண்டிலர் சிந்தைம கிழ்ந்துநல்
லாதர வுற்றுநல் லில்லின றந்தனில் வழுவாத
காமனை ஒத்திடு கட்டழ குற்றவர்
காதல றம்புரி நற்றவ முற்றவர்
கானம யிற்குலந் தன்னையு டைத்திடு கவினுர்த்த
காதள வுற்றக ருங்கயல் நல்விழிக்
காமர்வ ளைக்கரத் திங்களு தற்சிறு
காசணி எற்குழல் கண்டனை சொற்பகர் இளமாதர்
தாமொரு நற்றுணை தன்பிரி வெய்திநல்
தாயொடு மக்கள்சுற் றம்பிரிந் தின்பதைத்
தான்மறந் திட்டிடர்ப் பட்டிருட் புன்சிறை தனைமேவத்
தாவிலன் பிற்புரி தண்ணளி கொண்டகற்
தாய்தனை கொன்றிடு சத்யச பாமதி
சார்தவ முற்றிடு பெற்றிநல் வெற்றிகொள்பெருமாளே. ௧

தந்தா தனந்த தந்தா தனந்த
தந்தா தனந்த தனதான

எந்தாய் சிறந்த மைந்தோ டுயர்ந்த
என்றே னுமெங்கும் இணைநோா
இந்து டுசென்ற சிந்தா வளம்பொன்
என்னு கனின்றும் இழிகங்கைப்
பைந்தார் அணிந்து செந்தா தொளிர்ந்த
பண்பா ருசிங்க அணைமீதே
பண்பா டவண்டு நின்று டமஞ்ஞை
பைங்கோ லகந்தூர் பழனஞ்சூழ்
நந்தாய் அமர்ந்து சிந்தா குலந்துன்
பந்தீங் ககன்று நவைதீர
நன்றேய்ந் தெழுந்து தன்னேர் அகன்று
நந்தா தொளிர்ந்தின் றுயர்வெய்த
வந்தாய் மணின்று நொந்தார் துலங்க
வண்டேர் அரும்புத் திரிபாயின்
மைந்தா அறங்கள் நின்றேங் கவந்த
மன்மோ கனென்றும் பெருமாளே. ௪0

# 17. திருப்பணி

பாடிய தேதி :—ஆங்கீரச ஐப்பசி ௨௨-௨

## காவடிச் சிந்து

பாரதமா தாதவத்தின்
பாக்கியமா வந்தகாந்திப்
பண்ணவன்சீர் உள்ளமதிற் கொண்டு—சீலன்
பகருமெழில் நல்லறத்தைக் கண்டு—நல்ல

பண்புடையன் னனடிக்கீழ்த்
தொண்டுசெய்து நிற்பினிந்தப்
பார்புகழும் சீரியவாழ் வுண்டு—தாய்
பண்டையினும் மேம்படுதல் உண்டு. க

இந்தியர்க்கு வாழ்வளிக்க
வந்தஉயர் காந்திமகான்
இந்நிலத்தில் ஈடிலாத சீலன்—தவம்
எய்த்திடுநற் புத்திரிபாய் பாலன்—துணை

என்னஇணை பேறுபெற்ற
நன்னயக்கஸ் தூரிதனை
இல்லறக்கா தலியாக்கொள் கோலன்—மறம்
எனுமரக்கன் உயிர்குடிக்கும் காலன். உ

தான்பிறந்த நாடுயாச்
சத்தியநற் காந்திமகான்
தண்ணளியே ஓருருவா வந்தான்—கடுந்
தாங்கரிய இன்னலுமு கந்தான்—புகழ்த்
தாய்பயந்த மக்களைத்தீண்
டாரெனவே ஓர்குழுவார்
சாற்றுசெயல் கண்டுமிக நொந்தான்—அவர்
தாம்புரியும் தீமைக்குளம் வெந்தான். ௩

பாங்குடைய பாரதத்தாய்
பெற்றெடுத்த காந்தியெழிற்
பாதமலர் மாமுடியிற் சூடி—அவன்
பகருமொரு பேரறத்தை நாடி—இந்தப்
பார்மகட்கு மணிமுடியாப்
பண்டிலங்கி இன்றுதுயர்ப்
பட்டிடும்நம் அன்னை விலங்காடி—விழும்
பரிசுபுரி வீர்விரைவில் ஓடி. ௪

அன்புபொறை மெய்கருணை
அறிவுசாந்தம் புனிதநீர்மை
அத்துணையும் ஓருருவா நின்றான்—நாடு
அரசுபெறப் பெருஞ்சிறைக்குள் சென்றான்—உயர்
அன்னைபணி தன்னைவிடப்
பின்னோர் கடன்இல்லையென
ஆயுமறி ஞர்கொளந வின்றான்—காந்தி
ஐம்புலனும் நன்றடக்கி வென்றான். ௫

சாந்தமொழி தான்தருவான்
சத்தியமே சாற்றிடுவான்
தண்ணளியே கொண்டஉயர் காந்தி—எங்கும்
தன்னிகரி லாப்புகழை மாந்தி—கடல்
தத்தளிப்போர்க் கரைசெலுத்தும்
சார்புணைபோல் அப்பெரியோன்
தருமறத்தை உள்ளமதில் ஏந்தி—துயர்த்
தனிக்கடலைக் கடந்திடலாம் நீந்தி. சா

தாயரசு பெற்றுலகில்
சமநிலைமை யெய்தியரி
தாங்குமொரு பேரணையைச் சார்ந்து—மணி
தங்குமொளி மாமுடியை ஆர்ந்து—பெருந்
தரைவியக்கக் கொலுவிருந்து
முன்னையினும் பன்மடங்கு
தன்பெரிய நல்லறத்தை ஊர்ந்து—புவி
தான்புகழச் செய்திடுவீர் ஓர்ந்து. எ

துன்பெதுவும் மற்றவர்க்குச்
சூழலறம் அல்லவெனும்
துணிவதனால் உலகுபிணி நாரை—நிலம்
தோன்றியநாள் தொட்டிலாத சீரை—எதிர்
துன்னியடிப் போர்தடிகள்
சுக்கல்சுக்கல் ஆமளவும்
தொண்டாடி பட்டுநிற்கும் ஏரை—காந்தி
தோற்றுவித்தான் புதியதொரு போரை. அ

முன்னம் உலகம்மதிக்கும்
　　மூதறிவி னேடுயர்ச்சி
　　மொய்ம்புசெறி வீரமக்கள் தம்மை—பெற்றாள்
　　முதுமையுடைப் பாரதநம் அம்மை—அன்னார்

முழுப்புவியும் ஆய்ந்துபெரி
　　யோனிவனென் றியாவருஞ்சொல்
　　மோகனன்போல் ஆண்டதுண்டோ நம்மை—அவன்
　　மூண்டஒளிப் பேர்சொலிற்போம் வெம்மை. ௯

தீண்டாமை நோயதனைத்
　　தொலைப்பதற்குத் தனித்தொகுதி
　　தேர்ந்தமுறை அன்றெனும்நல் லுண்மை—கண்டு
　　சேருமுயிர் தந்திடநில் வண்மை—உயர்

செய்கைநனி கண்டுதெளி
　　வெய்தியுல கம்முழுதும்
　　செப்புமொரு காந்தியுருத் தண்மை—அறம்
　　செய்பவர்க்கே அவ்வடிவம் அண்மை. ௧௦



# 18. தீண்டாமை

பாடிய தேதி :—ஆங்கிரச ஐப்பசி உ௩-உ

கண்ணிப்பா.

மக்கட் பிறப்பினுளே—உடலால்
    மயங்கி மாறுகொண்டு
தக்க தகாததோரா—துயர்வு
    தாழ்வு பலகூறிப்
பக்கம் ஒருகுழுவார்—வரினும்
    பாபம் எனுமடமை
ஒக்கத் தொலேப்பதற்குக்—காந்தி
    உற்பவித் தான்புவியில் க

இந்தியத் தாய்வயிற்றில்—பிறந்த
    ஏழைச் சகோதரரைச்
சொந்த உரிமையெலாம்—இழக்கச்
    சொல்லி யடிகொடுமை
இந்தத் தரையிலிலா—திறக்க
    ஏலும் செயல்புரிய
வந்துதித் தான்காந்தி—உயிரும்
    மதியா துதவநின்றுன உ

புலையர் என்றபெயர்—கொடுத்துப்
பூவில் அவரிழிந்தோர்
நலமவர்க்கிலையெம்—பொருட்டு
நாயடி மைதவிர
இலையவர்க்குரிமை—எனச்சொல்
இழிந்த மெய்ப்புலையர்
நிலைய ழுக்கிடவே—பிறந்தான்
நீண்டபு கழ்க்காந்தி ரு

சிறையின் உள்ளிருந்தே—அறியார்
தீண்டத் தகாரெனவே
அறையும் புன்மைதனை—அகற்ற
அரிய செய்கைபல
குறையி லாவகையில்—புரிந்தான்
கூர்ஜர மண்டரிந்த
நிறைதவப்பயனால்—பிறந்த
நேர்மை செறிகாந்தி சு

கோவில் தனிற்பறையர்—எனச்சொல்
கூட்டத் தவரைவிடல்
பாவம் எனவறியார்—உரைத்துப்
பற்பல நாளாக
மேவும் அவருரிமை—பறித்து
விரட்டு தியபெரும்
பாவ வினையறுக்கப்—பிறந்தான்
பண்ணவன் எங்காந்தி எ

எமம் அமைந்தபெருஞ்—சிறையுள்
இருந்தும் தீண்டாரென்
நாமம் அமைந்திடுநம்—துணைவர்
நலமே சிந்தைசெய்து
பாமரர் பண்டிதரென்—பகரும்
பற்பலர்த் தாங்குமிந்தப்
பூமி திடுக்கிடவே—காந்தி
பூண்டனன் ஓர்விரதம் சு

இந்திய நாட்டினிலே—தனக்கு
எத்துணை செல்வாக்கென்
எந்த உலகினரும்—மலையில்
இட்டவி ளக்கினைப்போல்
சிந்தை நனிதெளியப்—புரிந்தான்
சிறைத னிலிருந்தே
நொந்திடு தீண்டாரென்—நுவல்வோர்
நோவகற் றுங்காந்தி. எ

தீண்டா தார்பொருட்டே—நாங்கள்
செகத்திற் பிறந்தோமென்
வேண்டுமட் டும்வாயால்—விரித்து
விளம்பு வார்பல்லோர்
மூண்ட செயலொன்றும்—அவரால்
முடியக் கண்டதில்லை
ஆண்டகை நாவசைத்தான்—அம்மவோ!
அதன்ப யன்சிறிதோ! அ

5

உண்மை உறுதிகொண்டார்க்—குலகில்
ஒன்றுமா காததில்லே
திண்மை யுடைக்காந்தி—கைதியாச்
சிறைத னிலிருந்தே
உண்மை யுடன்மொழிந்தான்—அதுதான்
ஊடுரு விப்பாய்ந்தே
எண்மைக் கோவில்பல—திறந்தே
இன்பம் பலர்க்கீந்த. க-

வேந்தி யவுரிமை—பெறவே
வீழ்ந்து சிறைபோந்த
காந்தி தன்பெரிய—அரிய
கடமை தீண்டாரென்
மாந்தர் வாழ்வுபெறல்—எனவே
மனத்துட் கொண்டாவி
ஈந்தி டவும்நின்ற—செயலே
எவர் போற்ருதார்! கo·



# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.





